# மனச்சாட்சியின் குரல்

அல்லது

# முக்தி






ஆசிரியர்
ராஜரிஷி யாலசன்யாசி

# Sri Parasakthi Ashram, Nijagal.

## Office : BANGALORE

### ENGLISH

| | Price Rs. | P. |
|---|---|---|
| " The only path " by R. V. S. Manian, written under kind patronage of and inspiration from H. H. Brahmasri Rajarishi Balasanyasi | 1 | 00 |
| " The Spiritual Silence " by Brahmasri Rajarishi Balasanyasi of the Himalayas A foreward by Swami Shuddhananda Bharathi (6th edition) | 1 | 00 |
| " Saint Arunagiri " (His Horoscope, Life and Composition) by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | 0 |
| " Stray Thoughts on various Subjects" (1) Way to Peace by Brahmasri Rajarishi Balasanyasi | 1 | 0 |
| " Stray Thoughts on Various Subjects" (2) Way to Health, by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | |
| " Stray Thoughts on Various Subjects" (3) Way to Wealth and Happiness by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | |
| " Saint Thayumanavar " Translated by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | |
| " Thayumanavar " Poems & Commentary by Brahamasri Rajarishi Balasanyasi. | 1 | |

# மனச்சாட்சியின் குரல்

அல்லது

# முக்தி







இயற்றியவர் :

ராஜரிஷி பால சன்யாசி

ஸ்ரீ பராசக்தி ஆசிரமம்

அலுவலகம் : பெங்களூர்-51

கேதாரிநாத் :: நிஜகல்

[உரிமை ஆசிரியருக்கே] 1973 [விலை : 25 ந. பை.

முதற் பதிப்பு : 1973
(மூவாயிரம் பிரதிகள்)

பிரதிகள் கிடைக்குமிடம் :
ஸ்ரீ பராசக்தி ஆசிரமம் ஆபீஸ்
டாஸ்கர் டவுண்
பெங்களூர் - 51

அச்சிட்டோர் :
மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ்,
சென்னை-2.



Dr. Rajarishi Balasanyasi

ராஜரிஷி பாலசன்யாசி

( Born on 16-3-1877 )

ஓம்

# மனச்சாட்சியின் குரல் அல்லது முக்தி

## முன்னுரை

"மனிதன் தன்னை அறிந்து கொள்ளுதல்" உலகிலுள்ள எல்லா புனித நூல்களின் கட்டளையாகும். ஒருவன் தன்னை அறிந்து கொள்வதால் மிகப் பெரிய உதவியானது பெறப் படுகிறது. இச் சிறிய துண்டுப் பிரசுரம் மனித இனத்திற்கு உண்மையான ஒளி காட்டவும் சரியான பாதையில் நடத்திச் செல்லவும் எழுதப்பட்டுள்ளது. கடவுள், மனிதன், தர்மம், முக்தி இவைகளைப் பற்றி தெளிவான கருத்துக் கொண்டுள்ள நான்கு அத்தியாயங்கள் இப் புத்தகத்தில் கொடுக்கப் பட்டுள்ளன. இந் நான்கு விஷயங்களில் மிகச்சிறந்த கருத்துகள் கொடுக்கப்பட்டுள்ளன. அங்கு, ஒரே விதமான விஷயங்களை திரும்பக் கூறுதலும், மாறுபட்ட கருத்துக்களை வெளியிடுதலும் இருக்கலாம். உண்மையான கடவுளைத் தேடுபவனுக்கு, இது சிறிய புத்தகமாக இருந்தாலும் பெரிய கருத்துகளைப் பற்றி தெளிவாக்க பெரிதும் உதவியாக இருக்கும். இத் துண்டுப் பிரசுரம் 1939-ம் ஆண்டு ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. இப்போது அநேக வர்சகர்களின் வேண்டுகோளுக்கிணங்க இந்த பிரசுரத்தை வெளியிடுகிறோம். இதை விற்றுக் கிடைக்கும் பணம் ஸ்ரீ பராசக்தி ஆஸ்ரமத்திற்கு பயன்படுத்தப்படும். வாசிப்பவர்கள் இதில் கூறப்பட்டுள்ள ஏதாவது கருத்துகள் வரவேற்கப்பட்டால் அதன்படி நடப்பார்கள் என்று கருது கிறேன். தமிழ் நாட்டில் ஆங்கிலம் தெரியாதவர்களின் வேண்டுகோளுக்கிணங்க இதை மொழி பெயர்த்துள்ளோம்.

ஸ்ரீ பராசக்தி ஆசிரமம்
கேதாரிநாத்
நிஜகல்
பெங்களூர்

இராஜரிஷி பாலசன்யாசி

# அறிமுகம்

""மனிதன் கடவுளின் பிம்பமாக படைக்கப் பட்டுள்ளான்,'' என்று பைபிளில் கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் மனிதன் கடவுளின் இயற்கையை எடுத்துக்கொண்டு கடவுளுக்கு சொந்தமாகிறுன். அவன் கடவுளால் பிறந்துள் ளான். அழியக்கூடிய இவ் வுலகத்திற்காகவும், மாயா உலகின் நன்மைகளேயும், பாவங்களேயும் பெறுவதற்காகவும் அவன் உண்டாக்கப்படவில்லே. கடவுள் இருப்பதிஞல்தான் மனிதன் இவ்வுலகில் இருக்கிறுன். மனிதன் ஒரு பிறவி கடஞளி. அவனுடைய உறவினர்களுக்கும் சமூகத்திற்கும் அவனுடைய கடமைகளே ஒழுங்காகவும், திருப்தியாகவும் செய்யவில்லேயென்ருல் அவன் கடவுளுக்கு சொந்தமானவன் என்று கூறிக்கொள்ள எவ்வித உரிமையும் இல்லே. அவன் அநேக கடமைகளே நிறைவேற்ற வேண்டும். முதற்கடமை தாய் தந்தையைக் கௌரவிக்க வேண்டும். இந்த அடிப்படை யான மதக் கருத்தை கூருத எந்த மதமும் உலகில் இல்லே.

இது ஒழுங்காக நிறைவேற்றப்படுமாஞல் அவன் உடனடி யாக கடவுளால் நேசிக்கப்படுகிறுன். அவன் உலகத்திற்கும் சமூகத்திற்கும் தன் கடமைகளேச் செய்ய வேண்டும். பிறகு அவன் கடவுளேப் பற்றிய பயணத்தை தொடர வேண்டும். அப்படிப்பட்ட ஒருவன் சன்யாசிகளாலும், ரிஷிகளாலும் சொத்தாக விடப்பட்டுள்ள பெருமைகளே, நன்மைகளே அடைகிறுன். அவன் உலகில் வருந்தத்தக்க மனிதர்களின் இதயத்தில் சந்தோஷத்தையும், நம்பிக்கையும் செலுத்து கின்ற நட்சத்திரமாக இருப்பான். அவன் சடைசியாக சேருமிடம் முக்தி அல்லது பாசங்களிலிருந்து விடுபடுவதாக இருக்கும். பின்வரும் பக்கங்களில் முக்தி அடைவதற்கான மார்க்கங்கள் விளக்கப்படும்.

ஓம் பராசக்தி

# அத்தியாயம் 1

## உலகு

உயிர் மேனியாகக் கொண்டே யோங்கு மொரு ஜோதி,
பயிலா லய முலகு பார்
ஒருதரர் இப்புவியோர் ; ஒவ்வோர் நலமெனதிச்
சீருலகென் நாடென்றே செப்பு
போக்குவர வில்லையேற் பூவில்லை ; நாடுகளின்
சேர்க்கை யுலகிற் சிறப்பு
உலகிற் பணிசெய்ய வுண்மை தெளிய,
நிலவுமிச் ஜென்மம் நினை.
புவித்தாய் தரும் பலனைப் போதியனவாக,
அவரவர் துய்த்தல் அறம்.

கடவுள், மனிதன், இயற்கை இம்மூன்றும் சேர்ந்து இவ்வுலகை ஆக்குகின்றன. இவைகளில் ஒவ்வொன்றும், தனியாகவும், ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டதாகவும் ஆராயப்படவேண்டும். இந்த மூன்றைப் பற்றிய உண்மையான அறிவு கடவுளை உணரும் தெய்வத்தன்மையான வாழ்க்கையில் அழைத்துச் செல்லும். இன்று உலகில் நாம் காண்கின்ற எல்லா உயிருள்ள – உயிரற்ற பொருள்களும் கடவுளிடமிருந்து வந்தவை. அவைகளெல்லாம் கடவுளின் அருளால்தான் இருக்கின்றன. இச் சக்கரத்தை சுழலச் செய்பவர் கடவுள். மனிதன் அறியாமையினால் இருளில் நடப்பதை விரும்புகிறான்.

# அத்தியாயம் 2

## கடவுள்

" ஏன முனாகி இருநிலமிடந்தன்
றிணையடி யிமையவர் வணங்கத்
தானவனாகம் தரணியிற் புரளத்
தடஞ்சிலை குனித்த வென்றலைவன்
தேனமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வ நன்னறு மலர் கொணர்ந்து
வானவர் வணங்கும் கங்கையின் கரை மேல்
வதரியாச் சிரமத்துள்ளானே."

'அன்பே கடவுள்,' கடவுள் நம்முள் இருக்கிறார். கடவுள் மட்டும் உண்மையானவர். கடவுள் மட்டுமே உயர்ந்தவர். கடவுள் தனியானவர். கடவுள் அழகானவர். உலகில் உள்ள அழகானவையெல்லாம் கடவுளின் புகழைக்

கூறுகின்றன. கடவுள்தான் முதல் காரணகர்த்தா. அவர் தான் குறைந்த அளவு அறிந்து கொள்ளப்படுகிறார். கடவுள் ஒரு பெரிய வேலை கொடுப்பவர், சிந்தனையாளர், திட்டமிடுபவர், மேற்பார்வையிடுபவரும்கூட. அவருடைய அடிகள் அழகானவை. அவர் இருக்குமிடம் ஒளிமயமானது. சூரியனும் சந்திரனும் அவரால் பிரகாசிக்கின்றன. அவைகளுக்குச் சொந்த ஒளியில்லை. கடவுளின் முன்னால் அவைகளுடைய ஒளி மறைந்து விடுகிறது. கடவுள் உண்மையானவர். உண்மையான மனிதன் அவனுள் தெய்வத்தன்மை பெற்றிருக்கிறான். உலகம் முழுவதும் கடவுளின் படைப்பு. கடவுளின் உருவம். கடவுளிடமிருந்து வெளிப்பட்டது. கடவுளின் புகழால் ஆனது. சுழல்கின்ற நாட்கள், வாரங்கள், மாதங்கள், வருடங்கள் கடவுளின் புகழைப் பேசுகின்றன. சூன்யம் அல்லது இடைவெளி என்பது கடவுளின் சிலை. கடவுள்தான் எல்லாவற்றினுடைய அஸ்திவாரம். மனம் அவனிடம் தங்கும்போது அது அமைதியையும் நிலையான சந்தோஷத்தையும் அநுபவிக்கிறது. கடவுள் மாறுவதில்லை; மற்ற எல்லாப் பொருள்களும் மாறுகின்றன. 'அன்பே கடவுள்' - ஆகவே நாம் அவரை நேசிக்கிறோம். கடவுளுடைய வேலை பரிசுத்தமானது. மனிதனின் வேலை பரிசுத்தமற்றது. கடவுளின் வேலையை எந்த மனிதனும் திருத்த முடியாது. கடவுளின் பகைவன் ஒருபோதும் மனிதனுக்கு நண்பனல்ல. கடவுள் மனிதனை முன்னேற்றமடையச் செய்கிறான். ஆனால் மனிதன் கடவுளை முன்னேற்றமடையச் செய்ய முடியாது. மனிதன் கடவுளை முழுதுவதும் அறிந்து கொள்ள முடியாது; கடவுளே அவனையும் தன்னையும் அறிந்து கொள்ள முடியும். பிரமிக்கத் தக்க யாவும் உலகின் பாகங்களும்,கடவுளின் பெரிய முழுமை.

'கடவுள்தான் எல்லாவற்றிற்கும் ஆன்மா' என்று போப் கூறுகிறார். கடவுள் உலகை ஆள்கிறார். நாம் நமது கடமைகளை புத்திசாலித்தனமாகவும், மனச்சாட்சியின்படி கடவுளை திருப்தி செய்யும் வகையில் செய்யவேண்டும். கடவுள் எல்லாவற்றையும் கொடுக்கிறார். அவர் எல்லா தேவைகளிலிருந்தும் விடுபட்டவர். கடவுளின் ஆட்சி அவருடைய அன்பிலிருக்கிறது. தேவைகளிலிருந்து மனிதன் விடுபட்டால் அவன் கடவுளுக்கு அருகில் செல்கிறான். கடவுள் தெரிவதில்லை. ஆனால் கடவுள் இருக்கிறார். கடவுள் வருத்தத்தினாலும், துன்பத்தினாலும் எரிகின்ற இதயத்திற்குக் குளிர்ச்சி பொருந்திய புத்துணர்வு அளிக்கக்கூடிய மழைத்துளியாக இருக்கிறார். கடவுள் தனிப்பட்ட முறையில் எல்லா புனிதத் தன்மையான

நற்குணங்களால் நிரப்பப்பட்டு இருக்கிறார். அவருடைய இதயம் முழுவதும் அன்பு மயமானது. அவ்வன்பிற்கு எல்லையேயில்லை. அவருடைய ஒரே நோக்கம் மனிதனுடைய நன்மையே. உலகிலுள்ள புழுவோ, புல்லோ, இலையோ, மொட்டோ அவருடைய செயல் திறனைக் காட்டாதவை இல்லை. கடவுளிடமிருந்து தொலைவிலிருப்பது மிகவும் வருந்தத்தக்க செயலாகும். கடவுளும் அவருடைய உதவியும் மனிதன் செய்யும் எல்லா தொழில்களுக்கும் தேவைப் படுகிறது.

"ஏழுகடல்களை மையாகவும், மரங்களை பேனாவாகவும் உலகை காகிதமாகவும் செய்து கடவுளின் புகழை எழுத நினைத்தாலும் முழுவதும் எழுத முடியாது" என்று கபீர் கூறுகின்றார்.

கடவுள் எல்லா விருப்பங்களின் பொருளாகவும், நம் முடைய எல்லா செயல்களின் முடிவாகவும், நம்முடைய எல்லா அன்பிற்கும் நிலைகளாகவும், எல்லா உயிர்களையும் ஆளுகின்ற சக்தியாகவும் இருக்க வேண்டும். கடவுள் அவரே நல்ல புத்தியுள்ள, பணிவான, பெருந்தன்மையான தரும சிந்தனையுள்ள அன்பான மனிதர்கள் மூலமாக காட்சி அளிக் கின்றார். கடவுள் அன்பானவர். நல்லவர். ஆனால் நீ அவரிடம் சுதந்திரமாக நடக்க முடியாது. ஏனெனில் அவ ருடைய அன்பிற்கும் இரக்கத்திற்கும் பின்னால் நேர்மை யென்பது மிகவும் சரியாக இருக்கின்றது. அது கடைசி அளவு வரையில் திருப்தி செய்யப்பட வேண்டும். நம்மிடம் எதுவு மில்லை யென்றாலும் கடவுளைப் பெற்றிருந்தால் எல்லாவற்றை யும் பெற்றவராகின்றோம். கடவுளைப் பெற்றிருக்கவில்லை யென்றால் நாம் மற்ற எல்லாவற்றையும் பெற்றிருந்தாலும் பயனில்லை. கடவுளை அறிந்தபோது ஒருவன் செல்வந்தனா கிறான். கடவுளை அறியாதபோது ஏழ்மை நிலையை அடை கின்றான். கடவுளை நம்பும்போது உன் மகிழ்ச்சி ஆரம்பமா கிறது. அவரைப் புகழும்போது உன்னுடைய மகிழ்ச்சி அதிகரிக்கிறது. அவரை நேசிக்கும்போது உன் மகிழ்ச்சி நிறைவு பெறுகின்றது. கடவுளைப் பற்றிய தத்துவ விசாரணை ஒரு கருத்தே. ஆனால் மதப்படி கடவுள், பூமியையும், சொர்க் கத்தையும் உண்டாக்குபவர். செயல்களின் தன்மைகளைத் தீர்ப்பு வழங்கும் சர்வ வல்லமை பொருந்திய நீதிபதி-கடவுள். அவருடைய எண்ணங்கள் முழுவதும் உண்மையிலேயே அன்பு, அருள், இரக்கம், அநுதாபம் நிறைந்தது. கடவுளை எண்ணுகின்ற மனிதனுக்கு மதவுணர்ச்சியில்லை. உலக முழு வதும் கடவுளுக்குச் சொந்தம். எல்லா உயிரினங்களும் அவ

ருக்குச் சொந்தம். அழியக் கூடிய பொருள்கள் மனித இனத்திற்கு துன்பத்தை கொடுக்கின்றன. கடவுள் நமக்கு ஆறுதலளிப்பவர். எவ்வளவு இருள் மயமாக நம்முடைய அதிர்ஷ்டம் இருப்பினும் மேகத்தின் மறுபுறம் போதுமான ஒளியானது இருக்கின்றது. கடவுளின் ஒளி அறியாமையாகிய இருளை விலக்குகின்றது. வினக்களுக்கு விடையளிக்கின்றது. எல்லா விதமான இருள்களையும் போக்குகின்றது. கடவுள் பற்றிய சந்தேகங்களை வெற்றி பெறுகிறது. எவ்வளவு கடினமான தீர்ப்பையும் அமைதியுடன் பொறுத்துக் கொள்ளச் செய்கிறது. ஒவ்வொரு மனத்தையும் எப்பொழுதும் ஒளி பெற்றதாகச் செய்கின்றது. எல்லாம் கடவுளால் ஆனவை. அவர் கையசைத்தால் மேகங்கள் கூடுகின்றன. கனத்த மழை பொழிகின்றது. கடலிலும் பூவுலகிலும் அவருடைய புன்னகை ஒளி வீசுகின்றது. விலகுகின்ற மேகங்களிலிருந்து அவர் திரும்பிப் பார்க்கின்றார். அவருக்கு வாழ்வும், மரணமும் ஒரே விதமானவை. அவருடைய அநுமதியில்லாமல் அவை நிகழ்வதில்லை. இதை நம்பாமல் அவருடைய தூதுவர்களுக்கு கதவை மூடும் எண்ணமோ, தைரியமோ யாருக்கு உண்டாகும் என்று லாங்பெர்ல்லோ கூறுகின்றார். கடவுள்தான் உலகின் ஆரம்பமும், முடிவும் ஆகும். அவரை அவ்வாறு எண்ண முயற்சி செய். அவரை உன்னுடைய மாலை முடிவாகவும், காலை ஆரம்பமாகவும் செய்துகொள். அவரை உன்னுடைய கடைசி எண்ணமாக இரவில் தூங்கப் போகுமுன்னும் காலையில் நீ எழுந்திருக்கும் போதும் முதல் எண்ணமாகவும் பழக்கப் படுத்திக் கொள். அவ்வாறு உன்னுடைய நோக்கங்கள் இரவில் புனிதப் படுத்திக் கொள்ளப்படும். பகலில் உன்னல் அறிந்து கொள்ளப்பட்டவை சரி செய்து கொள்ளப்படும். இவ்வாறு செய்வதால் உன்னுடைய நாட்கள் அமைதியுள்ளவையாக இருக்கும். உன்னுடைய வேலை செழித்து வளரும். உன்னுடைய வாழ்க்கை மத அனுஷ்டானமுள்ளதாக இருக்கும். உன்னுடைய மரணம் புகழ் உள்ளதாக இருக்கும்.

## அத்தியாயம் 3
## மனிதன்

" ஒருங்குற வுணர்த்திப் பின்னருல கெலாந் தானே யாக
வருங்குகன் சரணச் செந்தாமரை மலருள்ளத் தேத்தி
யருங்குளி ரிமையச் சாரலரித்து வாரத்தை நீங்கித்
தருங்கதி மூலமான வதரி காச்சிரமஞ் சார்ந்தான். "

கடவுள் மனிதனைப் படைத்தார். மனிதன் கடவுளின்

பிரதிமையிலிருந்து செய்யப்பட்டான். தெய்வ நம்பிக்கை யுள்ளவனுயிருப்பது மனிதனின் கடமை. அவனே தனது விதியின் தலைவன். அவனே தன்னை உருவாக்கியோ அழித்துக் கொள்ளவோ முடியும். அவன் வெறும் அமைப்பைவிட மேலானவன். கடவுள் தன்னை மனிதனுள் வெளிப்படுத்திக் காட்டுகிறுர். மனிதன் உயிர் ஊட்டப்பட்ட உலகத்தின் ஒரு சிறு பகுதி. அவன் வாழ்க்கைக்கு கொண்டு வரப்பட்ட பணிவு. அவன் சிறு தூசி.

கடவுள் மனிதனை உலகத்தில் மிக அழகிய பொருளாகப் படைத்தான். இயற்கை நம்மை மனிதனுக்கியது. மனிதன் நம்மை நகரவாசியாக்கினுன். மனித ஜாதி தன்னுள் ஆவி யூட்டப்பட்ட மண் ஜாடிகளுக்குச் சமம். குற்றமற்ற மனிதன் கடவுளின் பிரதிமை. இறைவனது படைப்பின் ஆச்சரியத்தை அறிய விரும்பினுல் மனிதனே அதற்கு உதாரணமானவன். மனிதனே கடவுளின் புகழ். மனிதன் மற்ற மிருகங்களை விட வேறுபட்டவன். மற்ற மிருகங்கள் தங்கள் பக்கங்களை நோக்கி வளரும்போது மனிதன் மேல் நோக்கி வளருகிறுன். மனிதன் கடவுளிருக்கும் மேலிடத்தைப் பார்க்கலாம். ஆனுல் மற்ற மிருகங்கள் தம் காலடியிலுள்ள பூமியைத்தான் காண இயலும். இயற்கைப்படி மனிதர்கள் யாவரும் வேறுபாடு ஏதுமின்றி படைக்கப் பட்டுள்ளனர். கடவுளுக்கு அடுத்த படி, மனிதனிடத்திலுள்ள எல்லாப் பொருள்களும் புனித மானவையாகவும், உண்மையாகவே அவனுக்குச் சொந்தமான வையாகவும் இருக்கின்றன. மனிதர்கள் எல்லோரும் எங்கே யிருந்து வந்தார்களோ அங்கேயே திரும்பிச் செல்கிறுர்கள். அந்த இடமே கடவுள். கடவுளை மிகச் சிறந்த முறையில் வழிபாடு செய்வதற்குரிய கோவில் அவனது உடலேயாகும். மனிதனைப் புரிந்து கொள்வது கடினமில்லை. இதைப் புரிந்து கொண்டால் கடவுளை எளிதாகப் புரிந்து கொள்ளலாம். மனிதன் ஆன்மாவாலும் உடலாலும் ஆனவன். இவ்வுடம்பு அழிந்துவிடும். ஆனுல் ஆன்மா அழியாதது. கடவுளும் சைத்தானும் சேர்ந்தே மனிதனின் உடலில் வாழ்கின்றன. மனிதனை முழுதும் தன் வசப்படுத்தவே இரண்டும் சண்டை யிடுகின்றன. கடவுளெல்லாம் அழிவில்லாத மனிதர்கள். மனிதர் எல்லாம் அழிவுள்ள கடவுள். இயற்கையால் கட்டுண்டு, தனது ஆசைகளில் எல்லையில்லாதவனுகி சொர்க்கத்தின் நினைவுகளையுடைய வீழ்ந்த கடவுளே மனிதன். பெண்ணினின்று பிறந்த மனிதன் துன்பம் நிறைந்தவன். நிழலைப்போன்று மறைபவன். கடவுளினின்று பிறந்தவன், நற்பண்புள்ள வாழ்க்கை நடத்துகிறுன். மீண்டும் கடவு

ளிடமே செல்கிறான். மனிதன் மிகவும் ஆச்சரியம் நிறைந்த ஒரு வேலைப்பாடு. அவனுடைய அறிவு மிக உயர்ந்தது.

அவருடைய உருவம், தோற்றம், அசைதல் முதலியவை பாராட்டத்தக்கவை. அவனுடைய நற்செய்கைகள் தேவதைகளினுடையதைப் போன்றவை. அவனுடைய உண்மைத் தன்மை கடவுளைப் போன்றது. மனிதன் இறந்து போகிறான். அவனுடைய உடலின் மேல் சமாதி எழுப்பப்படுகிறது. அவனுடைய பொருள் இரும்புப் பெட்டியிலோ, வங்கியிலோ பாதுகாக்கப் படுகிறது. அவனுடைய குழந்தைகளும் மற்றவர்களும் இடுகாட்டிற்கு அவனது உடலைத் தொடர்ந்து செல்கிறார்கள். அவனுடைய செயல்கள், நல்லவையோ, கெட்டவையோ, இவ்வுலகத்தைக் கடந்து அவனைத் தொடர்ந்து செல்கிறது. உலகமாகிய களிமண் உருண்டையினுள் தன் வாழ்விற்காகப் போராடும் சிறு குள்ளனே மனிதன். அவனுடைய அமைதியும், மகிழ்ச்சியும் கடவுளோடு அவனுக்குள்ள சொந்தத்தில்தான் உள்ளது. அறிவு ஒளிவு மிக்க மனிதன் காட்டில் தனது இரையைத் தேடும் நாகரீகமற்ற மனிதனைப் போன்றவன். மற்ற மிருகங்களைப் போன்று நான்கு பொருள்கள் மனிதனிடமும் உள்ளன. அவை உணவு, தூக்கம், உணர்ச்சி, உற்பத்தி செய்தல் முதலியன. மனிதனிடம் உள்ள சிறந்த குணம் கடவுளிடத்து அவனுக்குள்ள தொடர்புதான். இது இல்லையெனில் அவன் மிருகமாகத்தான் மதிக்கப்படுவான். நீரில் வாழும் மற்றும் ஊர்வன, நடப்பன, ஆகாயத்தில் பறப்பவை ஆகிய எல்லாப் பிராணிகளையும்விட மனிதனே அதிக முட்டாள்தனமுடையவன். அவனிடத்தில் கடவுள்தன்மை சேருமாயின் எல்லாவற்றையும் விட அறிவாளியாகிறான். மனிதன் மாறுபாடுகள் உள்ளவன். குழப்பத்தின் உருவம்.

எல்லாவற்றையும் முறைப்படி ஆராய்ந்து காண்பவன் எனினும் தூசியில் நெளியும் புழுவிற்கு சமமானவன். அவனே உண்மையின் காப்பு. எனினும் எதிர்பாராத தன்மைகளையுடையவன். அவனே உண்மையும், உலகத்தின் அபகீர்த்தியுமாவான்.

செல்வமில்லாதவனுக்கு இவ்வுலகில் சுகமில்லை. கடவுளின் அருளில்லாதவனுக்குச் சொர்க்கத்தில் மகிழ்ச்சியில்லை. கடவுளின் இருத்தலை மறுப்பவன் தன்னுடைய பெருந்தன்மை என்பது இல்லாதவன். இதனால் மிருகங்களுக்குக்கூட தன் உடலினால்கூட பரம்பரையாக உபயோகமற்றவன். மேலும் தன் பரம்பரை முழுதும் தன் பொன் போன்ற வாழ்வினால் கடவுளுக்கும் உபயோகமற்றவன். மனிதன் நியாத்திற்குக்

கட்டுப்பட்டவன். எல்லாவற்றையும் தொகுக்கும் தன்மையுள்ள புனிதமான அறிவுக்கு எடுத்துக்காட்டு. தன்னுடைய சிறுவயதின் விளையாட்டுப் போக்கினால் மகிழ்ச்சியில் ஈடுபடுகிறான். மேலும் வயதாகும் பொழுது ஆசைகளுக்குக் கட்டுப்படுகிறான். ஆவலுக்கும் ஆட்படுகிறான். தன்னையே உணர்ந்து கொண்டு கடவுளைத் தியானம் செய்வதற்கு அவனுக்கு நேரம் கிடைப்பதில்லை.

ஒ மனிதா! உன்னுடைய இளமை வாழ்க்கையில்
எவ்வளவு ஊதாரித்தனமாக நேரத்தையும்
உன் பொன்னான பொழுதுகளையும் வீணடிக்கிறாய் !
உன்னுடைய புகழ்மிக்க இளமை சிறந்த பகுதி !
மாறான பொய்கள் உன்னை ஆட்கொள்ளுகின்றன.
அதிகாரம் அளிக்கப்பட்ட விருப்பங்கள் கரைகின்றன.
அதனுடைய பத்து மடங்கு பலத்தை இயற்கை
அளிக்கிறது.

மனிதன் தன்னுடைய நிலை குறித்து வருந்துகிறான்
— பெர்ன்ஸ்

மனிதனுக்கு இரண்டு கண்களும் ஒரு நாவும் கொடுக்கப்பட்டுள்ளன. ஏனெனில் அவன் ஒரு தடவை பேசுவதை இரு தடவைகளாக கண்களாய் காண வேண்டுமென்பதற்காக. ஆனால் மனிதனின் நடத்தையிலிருந்து அவன் இரண்டு நாக்குகளோடு ஒரு கண்ணோடும் பிறந்திருக்கிறானோ என எண்ணத் தோன்றும். நிறையப்பேசுபவர்கள் மிகக் குறைவாகவே காணுவார்கள். தம்முடைய கருத்துகளை எல்லாவற்றைப் பற்றியும் தெரிவிப்பார்கள். எதையும் கூர்ந்து நோக்காதவர்கள். மனிதன் மிருகத்திற்குச் சமமானவன். அவனது பெரு விருப்பங்களின் வழியாகக் காண்போமாயின் பயங்கரமானவன். இவ்விருப்பங்கள் மிகப் பெரிய குற்றங்களைச் செய்யத் தூண்டும். அவனுடைய அறிவு இம் மிருகத்தைப் பழக்கும். கட்டளைக்குக் கீழ்ப்படிய வைக்கும். ஒரு நியாயத்திற்கும் சிறப்பான வாழ்க்கைக்கும் பணிய வைக்கும். தவறான வழிகளில் போகாதவாறு பயத்தினால் தடுக்கும். நம்பிக்கைகளினால் அவனது கடமைகளில் அவனை உற்சாகப்படுத்தும். சமுதாயத்திற்கு ஏற்றபடி உருவாக்கும். இவையே உள்நாட்டிலுள்ள மற்றும் மதசார்பான கழகங்களின் கொள்கைகள். மேலும் இவையே எல்லா சமயங்களிலும் அறிவிற்சிறந்தவரின் புத்திமதியாகவும் அமையும். முறையான கல்வியே இம் முடிவை அடைவதற்கான சிறந்த வழி.

# அத்தியாயம்: 4

## தர்மம்

"ஊமுற்ற மூத்துக் கோல் துணையா முன்னடி நோக்கி விளைந்து
இற்றகால் போற்றள்ளி மெள்ள இருந்தங்கி ளையாமுன்
பெற்றதாய் போல் வந்த பேய்ச்சி பெருமுலை யூடுயிரை
வற்ற வாங்கி றண்ட வாயான் வதரிவனங்குதுமே."

தர்மம் என்பது ஒப்பற்ற சொல். ஆரிய எண்ணத்திற்குப் புதியது. விசித்திரமானது. அது கிரகிப்புகளின் வெளியீடு. மனித வாழ்க்கையில் உள்ள உடல், மனம், ஆத்ம வாழ்க்கை ஆகியவற்றின் வளர்ச்சியைக் குறிப்பது. இது சரியான வாழ்க்கையை மட்டுமல்ல, சரியான ஆத்மாவையும் குறிக்கும். தர்மம் பிரசித்திப் பெற்ற வாழ்க்கையின் செயல்முறை அறிக்கை. எல்லா தர்மத்தையும் அடிப்படையாகக் கொண்டது. "தர்ம சர்வம் பிரதிஷிதிதம்"-இதன் பொருள் உலகத்திலுள்ள எல்லாவற்றுக்கும் தர்மமே வேர் என்பதுதான். தர்மமே சமுதாயத்தின் அங்கத்தினர்களை ஒற்றுமைப்படுத்தி அவர்களிடையே அடிப்படை ஒற்றுமை நிலவச் செய்கிறது. தர்மமே சமுதாய ஒருமைப்பாட்டுக்கு வழி செய்கிறது.

தர்மமே வெளிப்படையான நிபந்தனையற்ற கடமை, இதுவே தனிமனிதன் மற்றும் சமுதாயத்தின் அடிப்படைக் கொள்கை.

தர்மம் நம்மை புகழின் வழி செலுத்தும். கடவுளிடத்திலே மட்டும் நம்மை ஐக்கியப்படுத்தும். தர்மமே மனித வாழ்க்கையின் புகலிடம். அதுவே நம்மிடம் உலக அன்பைத் தோற்றுவிக்கும். தர்மம் நம்மைக் கடவுளிடத்திலும் இயற்கையிடத்திலும் ஒத்துப்போக வைக்கும். அதுவே மனிதனுக்கு எல்லாம். தர்மம்தாம் நமது தந்தை, தாய், மனைவி, சகோதரன், உறவினர்கள் ஆகியவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையையும், மேலும் அரசனுக்கும் இராஜ்ஜியத்திற்கும் செய்ய வேண்டிய கடமையையும் கற்றுக் கொடுக்கிறது. தர்மமே உண்மை. எனவே உண்மை பேசுபவன் தர்மம் செய்பவனும் ஆகிறான். தர்மமும் உண்மையும் ஒன்றே. மனித வாழ்வின் ஆன்ம வளர்ச்சிக்குரிய மண்ணே தர்மம். மேலும் தான் படைத்த எல்லாப் பொருள்களின் மீதும் தன் ஆதிக்கத்தைச் செலுத்தும் கருவியாகக் கொண்டிருப்பதும் தர்மமே. தர்மமே மிருகங்களையும், ஜடப்பொருள்களையும் காப்பாற்றும் சக்தி. மேலும் அது மனிதனுக்குச் சிறப்பையும் அமைதியையும் இவ்வுலகத்திலும், மேலும் மேலுலக ஆசியைப் பெறவும் பயன்படும்.

எவ்வாறு வெள்ளை எறும்பானது யாரையும் துன்புறுத்தாது அது தனது அடுத்த வாழ்விற்காக. களிமண்ணால் கூடு கட்டுகிறதோ அது போன்று மனிதன் தர்மத்தைச் சேகரித்துக் கொள்ளவேண்டும். நம் மறுஉலகத்தில் நம் தாய் தந்தையரோ, மனைவி மக்களோ, பரம்பரையோ நம் அருகில் இருக்காது. தர்மம் மட்டுமே அவ்வுலகில் நம் அருகில் இருக்கும். ஒரு பிராணி இவ்வுலகினுள் தனியாகவே வருகிறது; தனியாகவே இதைவிட்டுச் செல்கிறது. மனிதன் தனியாகவேதான் செய்த நல்ல மற்றும் கெட்ட காரியங்களுக்கான பயனை அனுபவிக்கிறான். செத்தஉடலை மரக்கட்டை போன்றோ, களிமண் குவியலை போன்றோ மண்ணின் மேலோ, மண்ணின் உள்ளோ விட்டுச் செல்கிறான். ஒருவனுடைய பரம்பரை அவனுக்கு விடை கொடுக்கிறது. தர்மம் மட்டுமே அவனுடன் சேர்ந்து கொள்கிறது. எனவே ஒருவன் தர்மத்தை கொஞ்சம் கொஞ்சமாக சேகரித்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் இனிமேல் அது நல் வழியில் நின்று அவனைக் காப்பாற்றும். தர்மம் உதவியாளராக இருக்குமெனின் ஒருவன் மிகுந்த இருள் மிகுந்த நரகத்தையும் கடக்கலாம். தர்மம் தன்னை மதிப்பவனை நடத்திச் செல்லுகிறது. தவங்களினால் ஒருவன் தன் மாசுகளைக் கழுவிக் கொள்ளலாம். அப்படிச் செய்வானேயெனில் ஒளியும் மகிழ்ச்சியும் மிகுந்த சொர்க்கத்திற்கு கடவுளைப் போன்று பிரகாசமான ஒளியுடன் ஏறலாம். 'மனு' என்ற சட்டம் இயற்றியவர் இவ்வாறு கூறுகிறார். அதர்மம் தனது மோசமான பின் விளைவுகளைக் கொண்டு வரும். சில சமயங்களில் கெட்டவர்கள் வெற்றியடைவது போன்று தோன்றும். ஆனால் நீடித்து நிலைக்கக்கூடிய பிரகாசமன்று. ஆனால் முன்பு செய்த தர்மம் தனது முடிவைக்காட்ட ஆரம்பிக்கும். அது இந்த அதர்மத்தின் விளைவுகளை உடனே தொடரும். அனுமன் இந்த உண்மையை இராவணனிடத்தில் தெரிவிக்கிறான். கீழ்க் கண்ட சிறந்த அடிகளில்.

"எவன் தீமைகளுடன் சேருகிறானோ, அதனுடைய விளைவுகளைப் பார்ப்பதற்கு முன், அது நன்மை செய்திருப்பினும் தீயவற்றின் முடிவையே காண்பான். இது தீமையை அழிப்பதற்காக நன்மை கொண்டுள்ள வீர்யம் அல்லது பலம். சந்தேகமில்லாமல் நீ உன்னுடைய நற்செயல்களின் பலனை அனுபவித்துள்ளாய். ஆனால் நீ இப்போது செய்யும் தீய செயல்களின் விளைவுகளைச் சீக்கிரமே அனுபவிப்பாய்."

எவன் ஒழுக்கமில்லாதவனாகவும், பொய்யனாகவும் வாழ்கிறானோ அவன் வெகு சீக்கிரம் அழிபவனாகவும் உலகத்தின் மகிழ்ச்சியினைப் பெறாதவனாகவும் ஆகிறான்.

ஒருவன் தனது முயற்சிகளின் நன்மையால் துயரம் அடையினும், தீய எண்ணங்களின்மேல் சிந்தனையைச் செலுத்தக் கூடாது. ஏனெனில் தீயவர்கள் வெகு விரைவில் அழிவினை அடைவர். எவ்வாறு புதிதாகப் பயிரிடப்படும் நிலம் பலனளிக்காதோ அவ்வாறே தீமைகள் இவ்வுலகத்திலேயே உடனடி பலனளிக்காது. கெடுதல் செய்பவன் சில நாட்கள் மகிழ்ச்சியாகவும் தனது எதிரிகளைத் தோற்கடித்தும் வாழ்கிறான். ஆனால் அவன் இறுதியில் வேரோடு வீழ்த்தப் படுவான். ஒருவன் உண்மையாக வாழ்வதிலும், சிறப்பு, பெருந்தன்மை, மன, மற்றும் உடல் சுத்தம், மனோவாக்கு காயம் ஆகியவற்றை தன் அதிகாரத்தின் கீழ் வைத்திருத்தல் ஆகியவற்றில் பெருமை கொள்ள வேண்டும். தனக்குக் கட்டுப்படாதவர்களைக் கொள்கைகளின் கீழ் கட்டுப்படுத்த வேண்டும். தன்னுடைய செல்வம், உடைமைகள் ஆகியவை தர்மத்தினின்று மாறுபட்டால் அவற்றை விலக்க வேண்டும். மேலும் மிகவும் துன்பம் தரக்கூடிய பின் விளைவுகளைக் கொண்ட தர்மத்தையும் மக்களின் நோக்கத்திலிருந்து மாறுபட்டதாயினும் விட்டுவிடக் கூடாது. ஒருவன், தன்னுடைய கை, கால், கண், நாக்கு ஆகியவற்றின் செயல் களையோ, பயன்களையோ கட்டுப்படுத்தக் கூடாது. சிறப்பான மக்களின் வழிகளையே பின்பற்ற வேண்டும். இது முன்னோர் களால் கடந்து செல்லப்பட்ட பாதை. இப் பாதையில் செல்வதால் எவ்விதத் தீங்கும் ஏற்படாது.

விடுதலை, வெறுப்புகளினின்று விடுதலை, பேராசையை விலக்குதல், தன் கீழ் இருப்பவரிடத்து இரக்கம் கொள்ளுதல், கற்புத் தன்மை, உண்மை, இரக்கத்தன்மை, சகிப்புத்தன்மை, மனோபலம் ஆகியவையே என்றும் நிலைத்திருக்கக் கூடிய சட்டத்தின் அடிப்படைகள்.

ஸ்ரீ கிருஷ்ணன் தர்மத்தை செயல் முறைகளில் மூன்று முறைகளில் விளக்குகிறார். அவை: தருணம் என்பது நேரான வாழ்வில் பின்பற்றுவது. பிரபவம் வளர்ச்சியைக் குறிக்கும் அகிம்சை என்பது உயிர்களுக்குத் தீங்கு செய்யாதிருத்தலைக் குறிக்கும். தர்மத்தின் குறிக்கோள்கள், நீதிகள், கோட்பாடுகள் ஆகியவை மத நூல்களிலும்; தரணம், பிரபவம், அகிம்சை ஆகியவற்றின் வழியில் மக்களைச் செலுத்தும் மதபோதகர் களின் போதனைகளிலும் அடங்கியுள்ளது. தர்மத்தை இவ் வுலகத்தில் கட்டாயப்படுத்துவதால் இவ்வுலகத்திலுள்ள ஜீவன்களை பரஸ்பர சண்டைகளிலிருந்து காப்பாற்றலாம். அவற்றினிடையே பரஸ்பர ஸ்நேசத்தைப் பெருககலாம். அவர்களுடைய உழைப்பு, ஒற்றுமை ஆகியவற்றைப் பெருக்கி,

அவர்களை சமாதானமாகவும் ஒன்றுபட்டும் வாழச் செய்யலாம். இவற்றின் வெற்றிகளிலிருந்தே கொள்கைகளின் சக்திகளும் மனித சமுதாயத்திலுள்ள சட்டங்களும் கணிக்கப்படவேண்டும். மனிதன் இப்படைப்பில் எவ்விதமான ஆன்ம மற்றும் நீதிவழி எவ்வாறு ஒரு மையமான வாழ்க்கையை நடத்துகிறான் என்பதன் கருவே தர்மம். மக்களின் மனோபல வளர்ச்சி மட்டுமல்லாமல் இச்செயல்களில் மற்ற பிராணிகளின் வளர்ச்சியும் அடங்கியுள்ளது. தன் நிலை உணர்ந்த மற்றும் தான் முடிவு செய்கின்ற செயல்கள் ஒழுங்கான கிரகங்களின் நிலையைப் பாதிக்கும். நீதிவழி நிற்கும், அகிம்சையைப் பின்பற்றும் சிறந்த மனிதர்கள், மேலும் ஒற்றுமை, நட்பு, உழைப்பை சீக்கிரம் அளிக்கும் விதம் ஆகியவை இருக்கும் சமுதாயத்தில் இயற்கை கொடூரமான விளைவுகளை விளைவிக்காது; ஆனால் அழகான, எழில் மிக்க தாய் போன்ற தோற்றத்தைக் கொடுப்பாள். எனவே இயற்கையில் சமாதானத்துக்கும் ஒற்றுமைக்கும் மனிதனுடைய பங்கு பெரிதாகவுள்ளது.

## அத்தியாயம் 5

## முக்தி அல்லது ஆன்ம விடுதலை

"எங்கானு மீதொப்பதோர் மாயமுண்டே
    நர நாரணனா யுலகத்தற நூல்
சிங்காமை விரித்தவன் எம்பெருமான்
    அதுவன்றியுஞ் செஞ்சுடருநிலனும்
கொங்கார் கடலும் பொருப்பும் நெருப்பும் நெருக்கிப்
    புகப் பொன் மிடற் றத்தனை போ
தங்காந் தவன் காண்மினின்றுய்ச் சிலரால்
    அளை வெண்ணெயுண்டாப் புண்டிருந்தவனே."

வழிகளுக்கும் அதன் முடிவுக்கும் உள்ள வேறுபாடுகள் தற்செயலாக நிகழ்பவை. அவையே முடிவானதல்ல. ஒன்றில் அது தொடங்குமெனில் மற்றொன்றில்தான் சென்று முடியும்.

முடிவைப் பற்றி ஆராய்வது தவிர்க்க முடியாதது. மனிதனுடைய இருதயத்தில் நிலையில்லாத் தன்மையை இறைவன் புகுத்தியிருக்கிறான். இம்முடிவில்லாத்தன்மை, தன்னைத் தானே பெருக்கிக் கொள்ளும். தன்னுடைய வழியைக் காணும் வரை அமைதி கொள்ளாது. உலகத்திலுள்ள உயிர்களின் உள்ளங்களிலும் இந்த சக்தி புகுந்து, அதனைத் தேடி அடையச் செய்ய முயற்சிக்கும்.

இயற்கையின் பெரிய சக்திகளை வணங்குவதில் மதத்தின் பரிணாமம் விளங்குகிறது.

ஆயினும் இயற்கைக் கடவுளை வணங்குவது என்பதும் முற்றுப் பெறாதவழியில் முடிவை அடைவதாகும். இது தேவதைகளின் வெளித்தோற்றத்தை வைத்தும், சிறு உண்மையை வைத்தும் கணிக்கப்படும். தேவையான ஒற்றுமையே இதற்குத் தேவை. இந்த வழி பின்பற்றத் தக்கது. ஏனெனில் இது மத உணர்ச்சியில் இயக்கப்படுகிறது. முக்தி வழி நம்மைச் செலுத்துகிறது.

அடுத்த சட்டம் மத வாழ்வை நடத்துவதைப் பற்றியது. முக்தி என்பது மதத்தைப் பற்றி அறிவின் சிறப்பேயாகும். எவன் ஒருவன் இவ்வழியைப் பின்பற்றுகிறானோ அவன் சுலபமாகத் தன் ஆன்ம வாழ்வினை அமைத்துக் கொள்ளலாம். செல்வத்தைப் பற்றியும் அதிகாரத்தையும் அடைய விரும்புபவர்கள் அதனை அடையும் வழியையே நினைத்துக் கொண்டிருப்பர். அதன் விளைவாக உணர்ச்சியின் பிழம்பாக அவர்கள் மாறுவர்.

அவர்களுடைய புரிந்து கொள்ளும் தன்மை இதனால் இழக்கப்படுகிறது இந்த ஆசைகளின் அடிப்படையில். மேலும் மனப்பூர்வமாக சிந்திப்பதையும் உண்மையை அடையும் வழியையும் மறக்கின்றனர்.

உண்மையை ஆன்ம வாழ்வின் அடிப்படையில்தான் அடைய முடியும். கடவுளிடத்து மனிதனிடமுள்ள மன ஆதிக்கம் அகற்றப்பட வேண்டும். உண்மையை அடைவது என்பது ஒரு மாயமான அனுபவம். அது செயல்முறை நிகழ்ச்சிகளைக் கடந்தது. அது ஊகங்களுக்கு அப்பாற்பட்டது. ஏனெனில் அது காணக்கூடிய மற்றும் கருப் போன்ற நிகழ்ச்சிகளின் கருத்தில் தங்குவது. ஆன்ம வாழ்வின் உண்மையானது பொருளின் குழப்பமில்லாத் தன்மைக்கு மாறுபட்டது. அதுவே மனத்தின் இறுதி முடிவு.

எவன் கடவுளைப் பற்றி தன் வாழ்க்கையில் அறிகிறானோ அவன் என்றும் நிலைத்திருக்கும் ஆத்மாவை அறிகிறான். எங்கும் நிலைத்திருக்கும், கடவுளை ஒவ்வொரு உயிரையும் இயக்கும் நிகழ்ச்சியாகக் காண்கிறான். இவ்வாறு அறிந்த ஆத்மா முடிவில்லாததுடன் கலந்து ஆத்ம மகிழ்ச்சியையும் அமைதியையும் அடைகிறது.

**சாந்தி, சாந்தி, சாந்தி.**

| | Price Rs. | P. |
|---|---|---|
| " All of Conscience Or Mukthi " by Brahmasri Rajarishi Balasanyasi | 1 | 00 |
| " Baja Govinda Sthotram ." in Sanskrit translated by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Aadi Sankarachariyar " (His Horoscope and Com mentary) by Brahmasri Rajarishi Bala sanyasi. | 1 | 00 |
| " Salulokees of Hermit " by Brahmasri Rajarishi Balasanyasi | 1 | 00 |
| " Saint Thiruvalluvar " His Horoscope & his life Translated by Brahmasri Rajarishi Bala-sanyasi. | 1 | 00 |
| " A Garland of Flowers " by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Raja Yoga " with Navakalpa (or How to live Hundreds of years) by Brahmasri Raja-rishi Balasanyasi. | 1 | 00 |
| " Nativity of Jesus " (His Horoscope & Miracles) by R. B. Sanyasi (2nd Edn.) | 1 | 00 |
| " Saibaba " (His Horoscope. His Life & Miracles) by Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Thoughts on Devotion to God " by Brahmasri Rajarishi Balasanyasi (2nd Edn.) | 0 | 50 |

## GENERAL SERIES

| | | |
|---|---|---|
| " Business Enterprise " by R. B. Sanyasi. (A Fore-ward by M. C. Forbes B.A., L.L.B.) | 1 | 00 |

| | Price Rs. | P |
|---|---|---|
| **TELUGU** | | |
| " Mukthi " translated by Avodhani. | 0 | 50 |
| **TAMIL** | | |
| " Sri Sankarachariyar " (His Horoscope, Life and Composition by Brashmasri Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Kadambam " by Brahmasri Rajarishi Balasanyasi | 0 | 50 |
| " Kanchana Malai " A Historical Novel by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Himalaya " by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Bhageerathi ' by Brahmasri Rajarishi Balasanyasi. | 1 | 00 |
| " Mana Saatchiyin Kural or Mukthi | 0 | 2[illegible] |
| **KANNADA** | | |
| " Bhakthi Vilasa, " by Brahmasri Rajarishi Balasanyasi. | 0 | 50 |
| " Shanthi " by Brahmasri Rajarishi Balasanyasi | 0 | 50 |
| " Shadgunagalu " by Brahmasri Rajarishi Balasanyasi. | 0 | 50 |
| " Pushpamala " by Brahmasri Rajarishi Balasanyasi. | 0 | 50 |
| " Saibaba " (His Horoscope, His Life & Miracles, by Brahmasri Rajarishi Balasanyasi | 1 | 00 |
| " Manavadharma " by Brahmasri Rajarishi Balasanyasi. | 0 | 50 |
| " Purandradasara Keerthane & Svrvangna Vachanagalu " by Brahmasri Rajarishi Balasanyasi | 0 | 50 |